தெழலான கங்குல்பகலும்பரிந்தத்தமதாலே, மந்தி ரமுடன்சொரிந்திட் டணேவேனோ மங்களகரங்கொ ளும்பொற் பொதுவோனே, சுந்தரமிலங்குமங்கட்பு கழோனே துங்கசிவசப்புலிங்கப் பெருமானே. (க)

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

ஷ அருணசலம்.

நினைவுறமுத்திசெ யருணையினற்புத நிதியருள் சக்கரனே, வினையறுமுத்தர்க ளகமதுபற்றிய விம லவைவயக்கரனே, புனையடியர்க்கடு முமலமறுத்திடு பொடியணிபுற்கலனே, முனைமொயுருத்திர மணி கொளிரத்தின முடியரவக்கலனே. (க)

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

பஞ்சகம்.

சந்தப்பாவினம்.

அமர்பொதுமேவியோகஞானாடக மருளிய தேவதேவபாவநாசக, குமரனேயேவிமானமேறுசூர ன்வன் குலமொடுமோளவானமாள்செய்போகிக, வி

மையவர்மோதமோடுவாழவேயரு ளெழில்கொளும்
வேதமோதுவாயனேயரு, ளுமையொருபாக மாமு
லோகநாயக வுசிதநுமோணமாலை சூடுமீசனே. (௧)

திகழ்திருமார்பனேடுபோதுவாழ்விதி திருவுறு
தேவர்வேத மாகமாதிகள், புகழ்சுசஞானரூப தேவ
நாயக புனிதமுறைறநேறுமீசனேவ, நிகழ்மதமாவி
ன்மைதை யேறுமேனிய நினைபவர்போதமேவஞான
நீதியை, யிகழ்வறவோதியாளும் யோகநாயக வென
துளம் வாழுவாழுமேகநாதனே. (௨)

விகசிதமாசரோச நேர்கொடாவினில் விரவிய
வாசையானதே விடாதென, தகமுறநீயுளேயுனிச
னேனுய வகமறுஞானயோகர்சூழவேமிகு, சுகநட
மேபொநாளுமாடுவோயனி தொடரலர்தாமமாலைசூடு
வோய்தொழ, விகபரபோகம்வீடுமீயுவோய்நல மி
சைகயிலாசவாசனேமகேசனே. (௩)

கயலெனமேவு காதுமீதுலாவிய கவின்விழிமா
தராசைவாரிவீழ்வுட, னயர்வதுசேர்வுருதவாறுநீதி
யிலனுகலிலேலைழநாளும்வாழவேயுறு, தயவருள்
வாய்கணுதிபாபணுடவி தழைவுறுநாகநூஷணு பரா

யரா, வுயர்வொடுசாமம்வேறிலேகனேசிவ முறு
பொருளானஞானமோதுதேவனே. (௪)

மனமிகுலோபமான மாதிமாய்வுறும் வகைபுரி
நேசமோடு கூடியேபுதிர், கனியெனநாஞூநாவுபாட
வேயருள்கனைதருபாவின்மாலைபாதமீதினி, லினிமை
யதாகநாடிநீகொள்வாயர வெழினதிதாமமேவி வாழு
நீள்சடை, மிலைவிடுசேகராகபாலயாகன மிளிர்பொ
ருவாடுஞானவேதநாதனே. (௫)

பஞ்சகம் - முற்றிற்று.

௨

திருச்சிற்றம்பலம்.

௬ கவிசங்கரம்.

மறைமுடிந்திடமுறைக்கிடுபெருந்தலைவிடைய
மணவறம்புரிவுறுங்கருணையக்கடலினே
யுறைபெரும்புவனமும்பதிகளும்பலைசெய
வுயர்வெழுங்கனபொனம்பலநடம்பயிலுவோய்
சுறைமிகுக்களமுறும்பரமசங்கரவினை
கலவிடுங்கமலவந்தணனுடன்கரியவ
னறைநெடுங்ககனமண்டுருவியுங்கதிர்விழி
யுறிதரும்படிதவிர்ந்திடவளர்ந்தவரனே. (௧)

விண்டலங்கடங்கிடங்க ளென்றுகொண்டுவி ண்டிலா, வண்டரும்பயங்கரங் கொளன்றுநஞ்சமு ண்டவா, வெண்டுலங்குசெம்புயங் கொடென்கணி ன்றபண்டனே, தொண்டர்வந்துவந்தனஞ்செய்து ங்கமண்டு நம்பனே.

(உ)

சந்தனகுங்குமங்கள்புழுககில் சந்ததமங்காங் கொடுடலது, கந்தமிகுந்துதங்கவணிவொடு கந்தர மங்கமண்டுகருமைய, குந்தளவங்கொணங்கைகலவி யென் குண்டுபொருந்துழுந்தி முழுகினே, ஞய்ந்தி டமின்பதங்கடருகுதி யுந்தியதுந்திநின்றதலையனே.

நிலைமைச்சால்பதுமேவிய ஞானிறையத்தானரு ண்மாதவங், குலையப்பாவியுளேயுறை கொடுமைக் கோபமதாமழு, ஞெலையச்சீதளமேறிய துணைமெய் ப்பாதகுகோதகங், தலைவைத்தேயருள்வாயமர் சம பத்தானுவதீதனே.

(ச)

கலையைவிரித்தேயறியுமுளத்தார் கருதுமலர்த் தாளொன துமனத்தே, நிலைகொளவைத்தேயருளுநிச ம்றேநிகழும்வனச்சுகாகுருளைக்கேய், முலையமுதிட் டேவளர்வுறவைத்தோய் முதிருகனித்தேனெனவு ருசித்தே, மலைவிலகத்தாரறிவிலிருப்போய் மலம தொசித்தேயிலகிடுசித்தே.

(ரு)

காகமொருவிழிமேவிநாடவேசெய் காரணிகர் வுறமேனிமாயனார்கட், கோகனகமலர்தூவுபாதமே யிக் கோளதுறுமடியேனொநாளுமேவிச், சோகமற வருள்வாய சோகனைசெஞ் சோதிமயகுருவான ஞானநாத, வேகநதியணிசேகராமகேச வேதமுதலெ னுநீதபோதகேவே. (௬)

நித்தியவேதங்களை வாசியாவே நிற்புறுபார் துங்கமூர்தேரதாவே, பைத்திடுசிரங்கணீள்பாணமா வேபறறியுளாகங்கணோர்வாகவேமூன், றுற்றிடுசோ மங்கனீருடுவோனே யொப்பறுநாகங்கடாராகமேலே, முற்றிடுமாதங்கநேர்மேனியானே முத்தியிலேதங் கும் வாழ்வேகல்காயே. (௭)

பத்தர்சித்தர்களுநாளுமறவாதுகனிவார் பத்தி சித்தமதின்மேவியுறு பூசைபுரியு, நித்தவந்துவெனு ஞானவுருவானபரனே நிஷ்களத்துவமதேறுமொரு மோனகுணனே, மத்தமெத்தவுறிராவணனைவாதை புரியு மட்டுமிக்கொழுகு மாமலர்கணேருமடிகண, நத் தமுற்றவறியாமையது மாடலுறவே நத்துமெற்கரு டியோகபத மேவுசிவனே. (அ)

இடைதளாட வெழுமாமலைக ளேய்முலைகளாற்,
றொடையுலாவுகுழலாலுணர்வு மாறொடர்புடன், க
டையதாகும்வனமேபுரியுமாதர்கழுதென், றடைவ
தானவறிவேயுரூறவாள்வையரனே. (௯)

நிகிலவுலகமுமுனமுன்வழிபடு நெறிகொள்கரி
யதன் முகனையசுரர்க,ளகலவயில்விடு முருகையருளி
ந லறமதிலகுற வருளுமலையுந்,திகழுமயிலெனு மு
ருவொடளவறு செழுமைநறுமலர் கொடுகனிவதுட
ன்,சுகுணவடியவ ரெனுமலனியவை தொடருமடிம
லர்தொழுதபெரியனே. (௧௦)

காமவிகாரக்கொடுமைப்பேயைக் கண்டேதண்
டித்தெக், காலுநிராசைப்புலியிற்சேரக் கண்டாடங்
துய்ப்பாய், நாமனுஞைவைப்பெறுபைச்சோகப் பொ
ங்கேதயென்றுற்று, நாடவுருபத்தனுவைப்போதக் கு
ன்றேயென்றற்கீ, பாமனுநாவுக்கரசைக்கூவிப் பண்
டேவிண்டிற்ற, பார்வையுநாடற் கருமைச்சீர்மைப்
பைந்தாடந்திட்டோய், சாமவுருபத்தனுவற்றீயக்க
ண்டேநின்றுற்றோய்,சாகைகுலாமெய்ச்சுருதிப்போ
தப்பண்டேசெஞ்சத்தே. (௧௧)

கவிசங்காம்-முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

ஷ பலசந்தமாலை.

கனகசபை யினினிகரி னடனமனை வரதமுறு
கருணையொடு புரியுநல வழகா,வனகதவ முனிவரக
மதனிலொரு சுகசனித வருணவம தருளுமிகு குழ
கா,பனகசய னயனனி யளவில்பக ழுருவியறி ப
டவிலடி முடியிலகு பொருளே, மனமதனி லளவி
ன்மகிழ் வணையடிய ரொடுமுறவு மருவும்வண மரு
ள்செய்திரு வருளே. (௧)

எனதுமலமதிரியும்வகைசெயினியசரணமருள்
ஈவையோ,மனமென்வனனிலுறையுமகமென்வரியுமு
டியவருவையோ, கனமதுடையமகளிர்மயல்கடவிர
வருள்செய்திடுவையோ, புனலுமதியுமுடையசடை
கொள்புனிதமருவுபகவனே. (௨)

ககனம்வளியனல்புனனிலமதிகனலிபுலனிலை
வடிவோனே, சகலவுலகுமுமயல்செய்வலியுறுதனும
தனையெரிவிழியோனே, பகலொடிரவறுவெளியிலுல
விடுபரமகுருவெனுமருளோனே, துகளறுவடகயி
லைமலையுறைசுகுணநிருமலபகவானே. (௩)

கலைமதிமதிலணைவுறுபொதுவதிலுமை கன்கா
ணை, வலைநதியலைதரநடமிடுபசுவினைதைந்தாடு, தலை
மையதுறுமிருகழலடிநிகழ்கரிதந்தோனே, நிலைபயி
றவமதுநிகழ்வுறுமனமிடநின்றோனே. (ச)

பொறிகடுன்றியவுருவு புலனிலொன்றியகரண
ஞ், செறிவதின்றியசுகுணசிவசின்மன்றுளபரம, வ
றிவதொன்றியவிமலரவருணின்றிடுமடிகள், பிறிவதி
ன்றியவுணர்வுபெறலதென்றுனாபுகலே. (ரு)

தண்டங்கழுகொண்டங்குறு சண்டன்பெறுபி
ண்டம், பிண்டங்கிடவெண்டங்கடிகொண்டன்றுதை
கண்டு, விண்டங்குவர்மண்டங்குவர்கண்டன்றவம்வி
ண்டே, தொண்டிங்குறமன்றந்திகழ்துன்றுந்தயைவி
ண்டே. (சு)

மேவிக்கொள்சீர்தொக்கதாளைக்கொ டேட்டைக்
வேதக்குழாஞ், சேவிக்கவேநிற்குமாநக்கனேசக்கு
சார்நற்குளா, நாவிற்கணுமக்குழாம்வைக்கநீர்வைக்
ஞானக்கணு, வாவிக்கணீநிற்கநேசிக்கவாழ்விக்குமா
சாக்கனே. (எ)

பூபாரப்பதிவாழ்வேசெப்பஞர்போதார்கற்பகவூ
, சோபாரத்தனமார்வேயைக்கடிதோளாளைக்கழு

தென், றேபார்வைப்படநீபார்வைத்தயையேயேழை க்கருள்வாய், காபாலக்கரனேகாலற்கொருகாலாமுக் கணனே. (அ)

வடிவெடுத்தெழுதரியமயனேமலைவளைத்திடுவ லியபுயனே, துடிபிடித்திடுநெடியகரனே சுடர்மணி ப்பனகமணியுரனே, பொடிதரித்திலகுருவவரனே புகழ்மறைப்பொருளுரைசெய்பரனே, கொடிதெனச் சொலுமலவயிரியேகுலவெனக்குளுறுமொருகரியே.

கமலமுறைவித்தனுற்றதாளங்கொடு கமலகரம் வைத்துமொத்தமாயன்கர, மமலைசெயமத்தளத்திறு ளும்படி யணையுமுயிர்சித்திமுக்திசேரும்படி, மூமல மறுவித்தசுத்தபாதந்தனை மூயலன்முதுகத்தில்வை த்துமோதந்தரு, விமலககனத்தினித்தமாடுங்கணவி புதர்புகழ்நித்தமுத்தவானந்தனே. (௧௦)

பலசந்தமாலை முற்றுப்பெற்றது.

உ

திருச்சிற்றம்பலம்.

## நவரத்தினமாலை.

### பாவினம்.

வாசபங்கயமலர்வளர்திருமறு மார்பனம்புயவ லோரவனடிமலர், தேசமர்ந்திடுமுடிபலபுகல்களுந் தே

டியும்பெறலரிதெனுமுணர்வொடு, நேசமண்டிடுதுதி பலபுரிவுற நீமகிழ்ந்தருள்புரிதருநிருமல, கோசமை ந்தையுநழுவியுனடியுறக் கோலமின்றிடுமருள்புரிபர மனே.

(௧)

கலையேறியவறிவாளர்செய் கவிமாலைகொள்சர ணங்,கலையேறியமதியோடுரகமதேறியசிகரங்,கலையே றியகரமேவியகருணாகரசிவியே, கலையேறியவிடையா ர்மயல்கலவாவணமருளே.

(௨)

கொடிதானவினையையடியார்களுய்யக்குலமோ டுமொய்க்கும்பரமே, மடியாதமுத்தியருளோடுதந்தவ விமேவுஞானகுருவே, துடிமேவுசெங்கையுறசம்பு வேயென்றுணையேயிலங்குசிவமே, படிமேவுமாசை யாவைக்கும்வித்தாம்படிறேற்குமுத்தியருளே. (௩)

ஞானமணிமன்றுனட மாடியநடேசா, பானல் விழியாளையொருபாகமுறநேசா, ஊனவிழியாலமரு முன்னைமிகநோக்கி, யீனன்மகிழ்வுற்றிடவிருங்கரு ணைசெய்யே.

(௪)

அருளினலகிலம்படைத்தளித்தழித்தத் தொழி ற்கப்பாலாய்ப், பொருவில்சிற்சொருபானந்தமாகிய பூரணப்பூங்தேவே, யிருளில்வந்துறுமறிவின்மையா

றபரிவிங்ஙனடைந்தெய்த்தே, னொருவராயினுந்த
க்கதோர்துணையிலையுய்ந்திடவருள்வாயே. (ரு)

எந்தக்குலமாயெவராயினுமிசையும்பூசைகொ
ண்டுள்ளன்பாய், முந்தும்பூசைமுடித்தாராயின்மூ
வாப்பதமேதவறுதருள்வோய், தொந்தொம்மென
வேநடனம்புரிவோய்தோன்றுத்துணையா மருளைத்த
றவே, சந்தப்பருவங்கொடியேற்கிலையோ சான்றோர்
தருமாறன்றென்பாரோ. (சா)

மாயையானசூடு கோடைமாய்க்கவுறு வலமை
மேவுசிவமேகமே, காயமாதிகளையானெனும்படிசெய்
கார்கொளாணவநாசனே, வேயையென்றுவளர்தோ
ள்களாருமைநல்விழிகளித்திடநடிப்பவா, பேயனே
ன்பிழைகள்யாவுநீக்கியுறபெரியபேரருள்புரிந்திடே.

கண்மைசேர்குருந்தடி மூளைந்திடுமுக்கட்கரு
ம்பே, தெண்மையன்பராம்வண்டுணக்காசிவாழ்தே
னே, யண்மையாகிநீயிருக்கவுமறிகிலாதந்தோ, வெ
ண்மையாகியிங்குழலுவனுணக்கழகிதோ. (அ)

இறையரமைந்தக்கரவோனே யெழிலாமைந்தக்
கரவோனே, குறையாமுருகைப்பெற்றோனே குண
மாமுருகைப்பெற்றோனே, மறையமலைக்குமரியானே

வடிவமலைக்குமரியானே,பொறைவில்லாகத்தரித்தோனே பொறுவில்லாகத்தரித்தோனே. (கூ)

நவரத்தினமாலை முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## திரிபந்தாதி.

கட்டளைக்கலித்துறை.

திருமால்விடையயன்காணாப் பதங்கமென்றிட்டியுறக், கருமால்விடையுறுஞ்சற்குருவாகிக்கரைசெய்சங்கைக்,கொருமால்விடைதருமுத்தமஞான வுமாபதியே, பெருமால்விடையிவர்பேராயிரத்துப் பெருமையனே. (க)

பெருமையிலங்குரித்துந்தியவாலிற் பெருந்தவத்தோர், கருமையிலங்குறுகாதேமறைப் பொருள்கட்டுரைத்தோ, யருமையிலங்குமாறுதிமேல்வைத்தவற்பகற்றி, யொருமையிலங்குறுமுத்திதந்தாளவுகந்தருளே. (உ)

அருளாரமுதமமுதுசெய்தோங்க நஞ்சாற்றெனவே, வெருளாரமுதர்நினைவேண்டநீயுன் விளங்குகண்டங், கருளாரமுதம்பெறவவரவ்விடக்கைதொட்டவா, பொருளாரமுதர்புகழ்மால்புகழ்ந்திடும்பூம்பதனே. (௩)

பூம்பதநாகங்கடுக்கையங்கூவிளம் பொற்சரண
த், தோம்பதநாகழறக்கரந்தூவவுள்ளுன்னவுடல், சா
ம்ப்தநாகமனமென்றுணரத் தருதியருள், போம்பத
நாகமணிந்தேயிலங்கும்புராதனனே. (௪)

தனமுடையோடெனநோக்கப்பரந்த தனையுள
காஞ், சனமுடையோடென கைகொங்கையார்நங்கை
சார்கழுதென், றுனமுடையோடெனதங்கமதாம்பந்
தமோவவருள், கனமுடையோடெனக்கொம்போய
டியனைக்காப்பவனே. (௫)

காப்பவனீவிருகற்பதிவாழுலகாதிகணற், பூப்
பவனீவிருஞற்றுமினென்றரிபூமற்கருண், மாப்பவ
னீவிருந்திகொன்றைமாலையன்வானவர்க்கு, மூப்ப
வனீவிரும்பித்துதிகேட்டருண் முத்தியதே. (௬)

தேவாரமுந்திருவாசகமுஞ்சொலுந் தெள்ளியர்
க்கு, மாவாரமுந்திவரந்தருஞானமணிவிளக்கே,கோ
வாரமுந்தியகொங்கைபங்காளகுணகரவென், ளுவா
ரமுந்திவந்தேயுனைப்பாடி நலம்புரியே. (எ)

நலம்பிரியாதவயிலிகல்வாள்விழி நங்கையர்தங்
கலம்பிரியாதகனதனங்காணுங் கருத்தையொழி, சில

ம்பிரியாதமறைச்சிலம்பாபெருந் தென்புலியூர்த தல
ம்பிரியாதவனே நடராஜமெய்ச் சங்கரனே. (௮)

காந்தைவருணைமலர்கொண்டுபோற்றிக் கனிந்த
வன்பர்க், கரந்தைவருணங்கெட நாட்டஞ்செய் சிவ
வார்பொறியாம், பரந்தைவருணடுங் கக்கலக்காவ
கைபார்த்தருளாய்ப், புரந்தைவருணஞ்செவியுட்புக
வின்றுபோதிப்பையே. (௯)

போதித்தருவனருகனைத்தேவெனும் புன்சமய
ம், வாதித்தருவரைமூனைத்தேவெனு மன்சமய,மா
தித்தருவர்க் கடலெழுந்தாங்கென வாக்கினர்க்குச்,
சாதித்தருண்முனைநின்றிட்டவாதவர் தந்திருவே. ()

திரிபந்தாதி முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

மும்மணி.

நேரிசைவெண்பா.

சார்கொண்டமேனிக் கடவுளயன்முதலோர்
சார்கொண்டுபோற்று நடராஜா—சீர்கொண்ட
சீர்மேவுநான் கறிவோர் நேசித்தசற்குரவு
நேர்மேவுமென்குருவு நீ. (௧)

உருத்திருண்டமேகத்தை யொவ்வாவெனமஞ்ஞர்
கருத்திருண்டதென்னக்கருமை—பருத்திருண்ட
தேனார்பூங்கோதைச் சிவகாமியாமொன்று
மானடேச ஹரா. (உ)

காரணமாநின்ற கருத்தாநடேசனினைப் [ய்
பூரணமாவாழ்த்துவதேபுண்ணியமாத்— தாரணிமெ
சேரத்தொழுவதுவே சென்னியாங்கண்ணருவி
நேரச்சிந்திப்பதே நெஞ்சு. (ங)

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## தெட்சணாமூர்த்திவெண்பா.

கருணைத்திருவடிவாய்க் கல்லாலின்கீழே
யிருணைத்திருநால்வர்க்கேலப்—பொருண்ஞானம்
போதித்துவைத்த புனிதகுருவேஞான
வாதித்தனேயென்னை யாள். (க)

ஆள்வாரிலியூர்மா டாகித்திரிவேனைத்
தாள்சூட்டியாளத்தகாதுகொல்—வேளெரித்த
கண்ணுதலோய்மெய்ஞ்ஞானக் கல்லாலடியின்கீழ்
நண்ணுபவனே நவில். (உ)

நவிலும்பாசீவர் நண்ணரியமுத்திப்
புவியிலொன்றுமென் றுபோதத்—துவிதமறச்
சின்முத்திரையாற் றெருட்டும்பரகுருவே
ன்முத்தியென் றடையேவ னென். (ரு)

நானென்னும்போத நடுவேமுளைத்துநின்று
கோனென்னுநின் றன்குரைகழலாந்—தேனென்னுட்
புல்லாமற்செய்யுமதைப்போக்கியருள்வைத்துக்
கல்லாலமுற் றுமெனைக் கா. (சு)

காதல்வெகுளிக் கரிசறுத்தென் னுள்ளமெனும்
போதணையாக்கொண்டுபுனிதச்செம்—பாதங்கள்
வைத்திருப்பதென்றோ மணியேயான்யோகங்கள்
கைத்திருப்பதென்றோ கழறு. (ரு)

கழற்கணென துள்ளங் காத்திருக்கச்செந்நாய்
பழச்சுவைபோலுந் துகிள்பாட—வழுத்துமணி
ாயம்புரியக் கருணைபுரிவாயின்று
ாயும்புலித்தோற் பரா. (கூ)

ரசிவபந்தப் பரிசுணர்த்தியாளச்
ரதசுயம்பிரகாசப்பே—ருருவெடுத்து
ந்தகுருவே வளர்மணியேமெய்ஞ்ஞான
ந்தரனேபாமாலை சூடு. (எ)

சூட்டுசிரமீதிற் சோதிமலர்ப்பதங்கள்
வாட்டுமலங்களெல்லாமாறவே—பாட்டுக்
கருளேபுரிகுருவே யம்பரமேவேதப்
பொருளேயடியேற்கிப் போது. (அ)

போதன்றிருமால் புலவர்வணங்கப்பொற்
பாதஞ்சிவந்தபரமனே—வேதஞ்சொல்
வித்தகனேயுன்னை விடாதவடியேனைச்
சித்தமுறுமெய்யருளாச் செய். (௯)

செய்யசடையுந் திருவதனமண்டலமுங்
கையமர்சின்முத்திரையுங்காழ்மலமும்—பொய்யு
மழித்தவடியு மாவந்துமுன்னே
கழித்திடுவாயென்றன் கரு. (௧0)

மூலகுருவாகிய
தெட்சணாமூர்த்திவெண்பா
முற்றிற்று.
௳

திருச்சிற்றம்பலம்.

## ௬ திருவருள்வியப்பு.

திருப்பாற்கடலைச் சிறுகுழந்தைகூவ
விருப்பாலளித்திட்டவெல்விற்—பொருப்பு

னருளேயருளன்றி யல்லாருளு
மருளோவுளமே யறை. (௧)

கல்லெறிந்தசாக்கியர்க்குங் காட்சிகொடுத்தசிவ
னல்லருள்போலும்பரிணுநாடிறு—வில்லை
பிரியாதிருந்தாற் பிழைக்கலாநெஞ்சே
கரியாகநீயிதனைக் காண். (௨)

சித்திக்கும்புத்திக்குஞ் சுத்திக்குந்தேவபத
முத்திக்குமத்துவிதமுத்திக்கும்—பத்திக்கு
மூலந்திருநடன முன்னேனருளேயென்
றோலமிடும்வேதநெஞ்சே யுன். (௩)

உரையாதிசேஷ்டை யொழித்துமனமே
திரையாவுநீக்கித்தெளித்துப்—பரையரனிற்
கூட்டுந்திருவருள்போற் கூறுநலஞ்சமயக்
காட்டிடத்துமுண்டோ கரை. (௪)

அப்புமுப்பும்போற்பிரியா வாறுதனைக்காட்டி [தாய்
யெப்புறத்துநின்றளிக்குமீசனருட்—கொப்புடைத்
வேறுபொருளுண்டென்று வேதாகமாதிகளுங்
கூறுமோநெஞ்சே குவி. (௫)

வேண்டுவனவெல்லா மிக்கவளித்தளிக்குந்
தூண்டுதலில்லாச்சுடரின் றாவருளே—யாண்டுந்
திரிவிலாதேயுருகிச் சிந்தித்தானெஞ்சே
பிரிவிலதாமுத்திவரும் பின். (௬)

கண்டவர்தமுள்ளங் கவரும்பெருநடனங்
கொண்டசிவபெருமான்கோலவரு—ளெண்டிசைக்கு
மாதாரவாம்வேறில்லை யாழ்ந்தமனமேநம்பு
போதரசம்பின்புவரும் பூத்து. (௭)

மூலமலத்தின் முழுகிக்கிடந்தவெமை
மேலடையத்தூக்குவிட்டான்வீறருளைப்—போலவே
யுற்றதுணையுண்டோ வுள்ளமேநீமறந்த
வெற்றியென்னவென்முன்னே பேசு. (௮)

பெத்தமுத்திதம்மிற் பிரியாமனின்றளிக்கு
மத்தனருளையன்றியாருண்டிங்—குற்றதுணை
யென்றுமுக்காற்புகன்று மேழைநெஞ்சேநாடாம
லின்றிருந்தாலியான்செய்வ தென். (௯)

தஞ்சத்திருவருளைத் தான்விட்டுமுன்னோடி
விஞ்சுவினையாலேவெப்புண்ட—நெஞ்சே
யரனருளைமுன்னிட்டே யைம்புலனையுங்கண்
டிரமுடனேநீயுண்பா யுற்று. (௧௦)

திருவருள்வியப்புமுற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# திருவருட்பஞ்சகம்.

## எழுசீரடியாசிரிய விருத்தம்.

ஆணவமலமாமிரவினிற்கிடந்த வடியனேன்ற
ன்னையன்றருளாற், பேணியேயெடுத்துத்தனுவில்வி
ட்டதும்பின்னருமுயிர்த்துணையாகி, யேணமாயுள்
ளின்மறைந்திருந்திசைந்த வின்பமென்பனநாளுளு
ங், காணவேயூட்டிநின்றதும்பரநின் கடைக்கணிற்
றேன்றியவருளே.
(க)

அருளினாற்றனுவுங்கரணமும்புவன மானதும
மைந்தபோகங்கள், சருவமுங்கிடைத்தவென்றறியா
மற்றுழ்க்திடுமவித்தையாற்கட்டுண், டிருமையுநாமே
முயற்சியாற்பெற்றே மென்றனுதினமுமுண்மைய
தாக்,கருதியேகிடந்தவென்பிழைபொறுத்துக் கடை
க்கணித்தருளுவாய்சிவனே.
(உ)

சிவமெனும்பொருளேயுயிர்வருக்கங்கள் செக
முறுபலபலபொருளா, மெனவயுநீயென்றுன்னருள
தனலே யிசைவுறக்காட்டினையின்று, பவமொழிந்த
கலவவ்வழிநிறுத்திப் படிறனேன்றன்னையெங்காளுந்,
தவமுறக்காக்குங்கடனுனக்லவோ தமியனேனுனை
ப்பதென்னேயோ.
(ங)

உரைசெயன்முதலாவுள்ளனவெல்லாமுன்னரு
ட்செயலலால்வேறே, கரையவுமுண்டோநினைக்கவு
மூண்டோ கருணையங்கடற்றிருவடிவே, பரையருளி
ண்டவுருவனோடனம் பண்ணிடுந்தகரவாகாச,வரை
யனேகாளத்திப்பரம்பொருளே யானைக்காவாழ்ங்கி
டும்பரனே. (ச)

பரமனேயிராமலிங்கமேமருதூர்ப் பண்ணவா
காழிவாழ்தேவே, திரமறைக்கெட்டாமோனமேயடி
யர்செய்திடுந்தீமையைப்பாரா,வரனெனுங்கருணாநிதி
முழுமுதலேயப்பனேவேதகிரீசா, குரவனாய்வந்தெ
ன்குறைதவிர்த்திட்ட கோலனேயென்னையாண்டரு
ளே. (ரு)

திருவருட்பஞ்சகம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## ஷ திருவளர்பதிகம்.

திருவளர்கமலத்துறைவிதிநெடுமா றேடியுமறி
யகிலாத, வுருவளர்சோதி யரும்பெரும்பொருளே
யொப்பிலாக்கருணையங்கடலே, மருவளர்மலரார்வா
ன்புரைகுழலாண்மகிழவராப்புலிதுதிக்கக், குருவள
ர்மணிமன்றினிடம்பயிலுங் கூத்தனேயென்னை
யாண்டருளே. (க)

## சிவசந்நிதானமுறை.

அ

அருள்செயுமுருக்கொண் டாலின்கீழ்நால்வர்க்
கருமறைப்பொருடனை மகிழ்ந்து, மருளறவுரைக்கு
ஞ்சிவபெருமானே வஞ்சனைகத்தசேதனவல், வி
ருளறஞானச்சுடருறத்தந்தாளத்தையேபவப்பிணி
மருந்தே, தெருளருந்தெளிவே குணப்பெருங்குன்
றேசெல்வமேயழிவிலாத்தேவே.

(௨)

தேவர்கண்முனிவர் புகழ்ந்திடவளங்கொ டில்லை
யுள்ளாய்பொறியைந்திற், றுவல்செய்துலகப்பற்று
டையிதயந் தனையொரீஇனாஞானன்றவார், பூவலர்
ருச்சித்தடிபணிந்தரியபுனிதகைவல்யமுற்றுயுமா, று
வேலைற்றினியவருள்புரிபரிம் கன்றிமற்றுண்டுகொ
ண்ணவிலே.

(௩)

நவிற்றிடற்கரியவண்டகோடிகளு ளவிதசிவர்க
ண்மிருதி, பவித்திரமறைகண்முதலியவனைத்தும் ப
டைத்தனைபரிவிலேனெஞ்சக், குவித்தருந்தவந்தான்
புரிந்துமெய்நிலையைக் கூடிடவருள்வகுத்திலகொ
ல், துவித்தெறவொன்றாய்விளங்குசெஞ்சுடரே து
ணையெனக்காருளைசெய்யே.

(௪)

செய்யவார்ச்சடையிற்பிறைமுடித்தவனே தே
யனேசுடர்மழுவுறுசெங், கையனேகறைகொண்மிட
ற்றனேசிவனேகௌரிபங்குறைதிருநீற்றின், மெய்ய

னேமணிமன்றினினடம்புரியும் விமலனேவினவுவ
கேண்மோ, தொய்யலைம்புலப்பற்றிரியநின் சரண்க
டொழுவருட்டருவதுன்பரமே. (ரு)

பரமனேகுழந்தைவெம்பசிக்கிரங்கிப் பனிப்ப
யவாரிதியளித்த, திரவருட்கடலேகுணப்பெருங் கு
ன்றேதீவினைக்கோரருமருந்தே, புராமூறுமூவாயிரம
றையவரிஞர்மறையவனெனவந்த, வரதனேயென்
மூனுமையொடாமேனெறி மகிழ்ந்துவந்தாள்வதெந் நா
ளோ. (சு)

நாளுநாண்மலர்கொண்டனதடியிணையினல்லரு
ச்சனைபுரிகில்லேன், வாளுடைமணிப்பொன்மாடநீடி
வ்வைமன்றினுன்னடனங்காண்கில்லே, னீளுழுநாவி
ஞற்றமிழ்பாடி நேடிடநயக்குகில்லேன்மற், கோளு
டையகத்தோடிவனுறைந்துழன்ற கொடியனுய்வ
கையதிலண்டணே. (எ)

எண்ணியவணிதைமாடமாலயமா யிமையக்கவர்
கடவுளென்றேவல், பண்ணிவன்காமவிகாரியாய்த்தி
ரிந்துபனிதரும்பிறவிவாரிதியி, னண்ணினேன்றன்
னையஞ்சலென்றேற்ற நாளினும்வாவிலைகொல்லோ,
வுண்ணினைகிலையோ வசட்டையோகல்லோ வுள்ள
மோதருமறைமுடிவே. (அ)

மறைமுடி விலங்குஞானவிண்ணொளியோ வஞ்
சனையியையந்தவெம்பொறியாங், துறையதிற்சென்று
விடயவானந்தந் துன்பமென்றறிந்தனிதென்றே,
குறைவறப்புசித்துப்பின்றுயரடைந்த கொள்கையை
ச்சிந்தையிலொருகா, லிறைத்துணைநினைக்கப்பதைக்
குதேயந்தோ வென்செய்வேனீதறியாயோ. (௧)

ஈதறியாமலிருப்பையேயானு லியான்பவவெடு
பமேகவேலை, யாதலாலெளியன் குறித்திழைபாவமா
கியதொழிலொருசாலும், வீதலாகாதேயாகலின்வி
னையன் வெம்பிழையெலாம்பொறுத்திரங்கி, மேதகு
வங்கள்வழுவறப்புரிந்து வீடுறநினைநிருவருளே. ()

திருவளர்பதிகம் முற்றிற்று.

௨

திருச்சிற்றம்பலம்.

சச்சிதானந்தவாழ்வு.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மனையுறுதீபம்விட்டு மற்றழறேடுவார்போல், வி
னையினேனகத்துணீதான் வேறிலாதிருந்துங்காணு,
னையிடம்பலவுந்தேடி யுற்றினைத்தேற்குஞானந், த
யின்றேயருளல்வேண்டுஞ்சச்சிதானந்தவாழ்வே

மெய்யினையின்றியாக நிறைவேற்றநினைப்பான்
போலப்,பொய்யினை யுன்னன்பின்றிப் பொருவிலா
முத்திதன்னை, யெய்தப்பன்னூல்களாய்த மேலெநெறி
யென்றலைந்தேன், சைவசித்தாந்தமோங்குஞ் சச்சி (உ)
தானந்தவாழ்வே.

கண்ணொளியிருளையுண்டு கதிரொழுந்தனைவிப்
பாச, மண்ணெழுவாய்நாதாந்த மருவியகருவியோடு
ண், ணண்ணெனவிழுங்கிநீயே நகுதல்செய்திடுதல்
வேண்டுந், தண்ணெனுமருளாய்நின்ற சச்சிதானந்த (௩)
வாழ்வே.

சருவனீயென்றுரைக்கத் தனிமறையான்வேறு
கி, வருவினையுண்டோவிங்கு வந்தவாறெனக்குணர்த்
து, மருவியகருணானந்த வாரியையின்றுனக்குத், த
ருவம்வாவென்றழைப்பாய் சச்சிதானந்தவாழ்வே.

பொன்மயந்தவிரவேருப் பூஷணமுண்டோவா
ங்குச், சின்மயந்தவிரவேறு செகமுண்டோவென்று
கூறு, நன்மயவாக்கியத்தை நம்பியுன்னருளைப்பெற்
றுத், தன்மயமாகச்செய்தி சச்சிதானந்தவாழ்வே.

பிறங்கியமூன்றெழுத்தும் பிரணவத்தன்றிவே
ரே, புறம்பெனவின்றமூன்று பொருளுமச்சிவத்தி
றமஞ்செயுன்னருள்வாக்கல்லா னறிந்

னுபவிக்கச்செய்து, மறம்பவமகற்றியாள்வாய் சச்சிதானந்தவாழ்வே. (சா)

கைவிளக்காலேயொன்றைக் காணலினருளைக்கொண்டே, யுய்வகையுனையுணர்ந்தே யுச்சியினுவலமென்னப், பொய்வலைநீக்கிமெய்யிற்பொருந்துறக்கருணைசெய்வாய், சைவமாமறையில்வாழுஞ் சச்சிதானந்தவாழ்வே. (எ)

கொள்ளித்தேள்கொட்டப்பட்ட குரங்கெனக்குதிக்குமென்ற, னுள்ளத்தைக்கருப்பூரந்தொட்டுண்ணுறுதீபம்போல, விள்ளவுண்டப்புமுப்பும்விரவவினைனைக்கலப்பாய், தள்ளில்பொருளைப்பூண்ட சச்சிதானந்தவாழ்வே. (அ)

ஆகவன்சன்னிதானத் தடுத்துறுதீபம்போற்றன், போதமதடங்கிநிற்கப்பொருவருக்தயைபுரிந்து, பேதமோடபேதம்பேதா பேதமுஞ்சூழன்றுநின்ற,சாகமுத்தியையளிப்பாய் சச்சிதானந்தவாழ்வே. (கூ)

துளங்குறுகறங்கதென்னச் சுழல்வுறுமனமாய்ந்தேழை, விளங்குமுன்றேடிணங்கி விமலமாநிற்கவேண்டி, யிளங்கன்றதற்குச்சேதா விரங்கல்போலின்றுநீயே, தளர்ந்திடுமெற்கிரங்காய் சச்சிதானந்தவாழ்வே. (க0)

சச்சிதானந்தவாழ்வு முற்றிற்று.

## திருச்சிற்றம்பலம்.

# ஞானநிஷ்டாபேட்சை.

### கலிநிலைத்துறை.

கருவியானவையுநின்னருள்கொண்டியான்கழற்றிப்
பொருவில்சச்சிதானந்தமாம்பரமயம்பொருந்தி
யிருமையாகியபோதமுமகன்றிடவெனக்கு
மருவுநல்லருள்புரிகுதிமன்றுள்வாழ்மணியே. (௧)

அறிவிலேனுடறியாமையுநீக்கிமெய்யறிவாய்ப்
பிறிவிலாவருடரிசித்துப்பெட்புடன்பெரிய
குறியிலாச்சிவபரம்பொருளாமுனிற்கூடி
மறிதராதுறவருள்புரிமன்றுள்வாழ்மணியே. (௨)

சகலகேவலநீத்துணர்வாய்நின்றுசார்ந்த
விகலமில்பரமாதன்னுளென்னறிவினைவிட்டுச்
சுகசொருபமாமுன்னுடன்பிறிவறத்துலங்க
வகரமாமருள்புரிகுதிமன்றுள்வாழ்மணியே. (௩)

இச்சகப்பொய்மையமாயையாமென்றுளேயெண்ணி
நச்சிடாமனின்றாருடன்னேயநம்பி
நிச்சலும்பிருந்துனிலேகலந்துறநீகண்
வைச்சுநாயடியேனையாண்மன்றுள்வாழ்மணியே. (௪)

# சிவசந்நிதானமுறை.

கோணவந்தனைஞ்செய்யவிவேகமில்கடையேற்
காணவந்தழைமாயையயாமல்பகலகற்றி
யேணமைந்துமெய்ஞ்ஞானமாமொளியினிலிசைந்து
மாணடைந்துறவருள்புரிமன்றுள்வாழ்மணியே. (௫)

நினைவுடன்மறப்பாகியபேரலைநிகழாக்
கனையினல்லறிவாகியமாக்கடல்கலந்தே
யினைவுநீங்கியக்கழுந்துறவருள்புரியின்று [யே
வனையுஞானவிண்ணென்றுமைமன்றுள்வாழ் மணி

சாக்கிராதியவவத்தைகளியாவையுந்தணந்து
போக்கில்சிவனைப்பரனையஞ்சிவத்தினைப்புரிந்து
நோக்கிமேற்சென்றுதுரியத்துணின்றிடநுணுக்கம்
வாக்கிறைலுணாசெய்குவாய்மன்றுள்வாழ்மணியே. ( )

கரணவாதனைமாற்றியத்திரையில்பாற்கடல்போற்
புரணமாமுணர்வாய்நின்றுமேலவாய்ப்புகுந்துக்
கரணவானந்தநிஷ்டையைமேவியங்கடைந்த
மரணநீங்கிநின்றிடவருண்மன்றுள்வாழ்மணியே ( )

இரவுநற்பகல்சேர்ந்துருவிடக்கினிலிருத்திப்
பரவுமானந்தவடிவினைத்தந்தெனைப்பரிவாயப்
புரவுசெய்திருவடியிறைற்றாக்கியேபோக்கு
வரவுமின்னிலைவைத்தருண்மன்றுள்வாழ்மணியே. ( )

எனதியானெனுமகமமதைகடமையீர்த்தே
யினலினல்லறிவாயென்றுநின்றுமொன்றிரண்டென்
றுணலிலாநிலையென்னைவைத்திடுங்கடனுனதே [யே
மணமுமெட்டொணுப்பேரொளிமன்றுள் வாழ்மணி
பிரித்திடப்படும்பிழைபலபுரியினும்பிள்ளை
யுரித்ததாமனைபொறுத்தலினியருளூட்டி
யரிட்டமில்பதத்துரியத்திற்செலுத்தியதப்பால்
வரிட்டநன்னிலைவைத்தருண்மன்றுள்வாழ் மணியே.

ஞானநிஷ்டாபேட்சை முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## காப்பியக்கலித்துறை.

நாமார்நமகுப்தியாரெனுஞானமின்றித்
தீமாதர்களின்பங்கருதியதீயனுய்த
லாமாறுபுரிந்திலையேவினியாவதெங்ஙன்
மாமாயன்வணங்கும்விளங்கியமன்றுளானே. (க)

பையாரரவப்பணிபூண்டிறுபண்பனேயோ
கையார்மழுவேவாய்சிவபூதகணேசனேயோ
வெய்யாய்தணியாய்திருநீற்றின்வெண்மெய்யனேயோ
செய்யாய்கருணைப்பெருக்குய்யவித்தீனனேனே. (உ)

வில்வம்மறுகும்புனைவோயுன்விறற்கழற்கே
புல்வம்மினியேயிங்குவாவெனப்போந்தமைத்தேன்
செல்வம்விடயங்களிலென்றெனையீர்த்தசித்தங்
கொல்வம்மெனநீவந்தெதிர்நின்றுகூறலென்றே. ()

என்றாழ்முனைமீனமொடுங்கியதென்னயானு
நின்றாவருடன்னுளடங்குறுநிஷ்டைசெய்து
குன்றாசலினார்பிறப்பற்றுச்சுகம்பொருந்த
நன்றாகமுஞானமுமேயருணம்பநீயே. (ச)

ஆறெனதாருயிருண்ணியனைந்துநின்று
மீறுயமலச்செயலாலுனையின்றுகாணேன்
ஏறொளிரும்மருளாங்கதிர்தாம்பரப்பு
கோனுஞ்சிவசங்கரனேசற்றுணைப்பொற்குன்றே. ()

காப்பியக்கலித்துறை முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

சங்கீர்த்தன பஞ்சகம்.

எழுசீரடி விருத்தம்.

மங்களாகரசங்கராவரமாதரார்கரபூதரா
திங்களாரஜடாதராசுயதெய்வமோனபராபரா
சங்கராகருணாகராசிவகாமசுந்தரியாதரா
புங்கஞானநடேஸ்வராசிவபுங்கஞானநடேஸ்வரா(க)

ஆலகாலசுபட்சணசகமாதியாவுமிரட்சண
மூலசர்வதுரந்தாபிரமோதமோனபரம்பரா
பாலசுப்ரமண்யாதராவிடுபந்தஞானபயோதரா
காலருத்ரநடேஸ்வராசிவகாலருத்ரநடேஸ்வரா. (உ)

மூலமானசுதந்தராதிரிமூர்த்திரூபநிரந்தரா
ஞாலகாரியகாரணசுகஞானசற்குருபூரண
சீலவேதநல்வாசகஉபாகின்மயம்பெறுமாகண
பாலநேத்ரநடேஸ்வராசிவபாலநேத்ரநடேஸ்வரா. ()

ஏதநாசநிராமயாவளரேகநாதவகண்டிதா
போதசத்வசுகாலயாபரிபூதபூத்தகிர்பாலயா
பாதநூபுரவாரணமிகுபாவமூலநிவாரண
வேதசாரநடேஸ்வராசிவவேதசாரநடேஸ்வரா. (ச)

பேதவாதமதாதீதாபரபீடலிங்கமனோகரா
சீதமாநதிசேகராவறிசித்தவாசமகேஸ்வரா
மூதராவரகங்கணநவமுக்தமாசுணபூஷண
பூதநாதநடேஸ்வராசிவபூதநாதநடேஸ்வரா. (ரு)

சங்கீர்த்தனபஞ்சகம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## ஷ ச து ஷ்டீ ய ம்.

அடியனேனங்கத்தாலொருதாமுன்னரும்பணி
புரிந்ததைவென்றும், படியுறப்பயின்றதாத்திருவுள

த்திற்பாங்குறவமைத்திட்டாலுய்வேன், வடிவுடையு மையாள்பங்குறவருளும்வள்ளலே யென்னுளத்துள் ளே, குடியுறுஞ்சச்சிதானந்தப்பொதுவிற்கோலயா ர்நடம்புரிசிவனே. (௧)

ஏழையேன்வாக்கானின்றிருநாம மிங்கொருக ரமுரைத்ததனைக், கோழையிலன்பாயென்றநந்தா னுரைத்த கொள்கையதாவெணிற்றன்றுப், பாழையுங் கடந்த சிதம்பரத்துய்வேன்பராபரசங்கரபொல்லா, ஆழையேவிலக்கும் பொற்பொதுநடிக்கு முண்மை யானந்தசிற்சிவனே. (௨)

மனத்தினாலடியேனொருதரநினைத்த வகைதனை யோய்விலாதென்று, நினைத்ததாவன்பினுன்றிருவுள த்தினினினைத் திடுவையேலுய்வே, னனைத்தையுமாளு மகிலநாயகனே யாரணமுத்தியாம்பொருளே, கனத் தபொற்பொதுவிநடமிடுங்கருணை காநிதியேசெழுஞ் சிவனே. (௩)

அறிவினாலடியேனொருதரமுன்னையறிந்ததைபெங் தக்காலமுமே, பிறிவிலாதறிந்ததாத்திருவுளத்திற்பெ ட்புறவமைத்தியேலுய்வே, னொருபிரணவப்பொ ருளதுதானீயெனயாவருமுணராக், குறியதாக்கொண் டைறத்தெரியலையணிந்த கோதிலாநடம்புரிசிவனே. ()

சதுஷ்டயம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# அ ழு ங் க ல்.

## கொச்சகக்கலிப்பா.

அளவைகளாலெவ்வளவு மாருமளவாவணமர், யளவிலிலுலகுமளந்திருக்கை நின்னியல்பெவ், வள விலிருக்கவைத்தாயவ்வளவே நிற்றலென்ற, னளவா குமாதலினாலாண்டருள்செய்நற்பொருளே. (க)

கன்னங்கரியகுழல் கண்டரிவைபின்செலவோ, பென்னம்பெரியமுலை பெட்பொடுகண்டுறவோ, சின் னஞ்சிறியவிடை தேர்ந்துமயங்கிடவோ, தன்னந்த னியேனைத்தான்படைத்தாய் நற்பொருளே. (உ)

மெய்ப்பொருளைநாடாமல் வேறுபலநுன்பமு றும், பொய்ப்பொருளைத்தான்பற்றிப் புக்கழுந்திப் போற்றிடவோ, விப்புவியைப்பற்றியெனதென்றுது ன்புறவோ, துப்பிலனைத்தான்படைத்தாய் சுத்தசிவ நற்பொருளே. (ங)

சகஞ்சிவனீசனெனுஞ்சந்தார்த்தநீயே யென், றகஞ்செறியநாயே னறிந்துந்தியங்கிடவோ, சுகங்கா ட்டுமத்துவிதந் துய்க்காதலைந்திடவோ, விகம்பரம் பாராதவெனைப்படைத்தாய்செம்பொருளே: (ச)

ஆனவருஞ்சிரவ ணுதியினுற்பதமு, மூனம றவேயேழைக் குற்றிடுவதெங்ஙனோ, ஞானமிருநெ

றிலைய நான்சேர்வதெப்பொழுதோ, யோனநிலைபெ
ற்று முற்றலென்றோ செம்பொருளே. (ரு)

எல்லாமாநீநானெனன் றேய்ந்துபின்சுட்டோவ
லென்றோ, எல்லாமுநின்செயலா யெண்ணிநிற்பதெ
ந்நாளோ, எல்லாவுயிர்க்குமிரக்கமுறலெப்போதோ,
எல்லாத்துறவுமிசைவதென்றோ செம்பொருளே. ()

எல்லாப்பொருளுமுன்னி லேய்ந்தநிலைமையை
யும், எல்லாப்பொருளிலுநீ யேய்ந்ததுவுங்காண்பே
னோ, நல்லார்கொளத்துவித நாடுதன்மாயாகமென,
நல்லார்சொல்வதுதன்னை நண்ணுவனோசெம்பொரு
ளே. (எ)

அழுங்கல் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

ஒ வேண்டுதல்.

மணிமேவுபுனற்கலையார் மாநிலத்தின்மகிழ்ச்சி
தரு, மணிமாதிசித்திகளையடையமுயல் விருப்பனைத்
தும், தணிவாகிமுத்திநிலை தான்பெறுமாவிருப்பருள்
வாய், அணிநிலாவணிசடைக டெலங்குடப்பெருமா
னே. (க)

அழிகின்றவிடம்வேண்டி யலைந்தலைந்துநாளை
ல்லாங், கழிகின்றவகைவிட்டுக் கருதரியபொன்ன
ருளைப், பொழிகின்றநும்பதமே புகலிடமென்றுறவ
ருள்வாய், மொழிகின்றகதிர்த்தாம முடித்தடப்பெ
ருமானே. (உ)

அலைவளைந்தநிலமீதி லணைந்தவிதப்பொருடேடி,
யுலைகின்றமதிவிட்டே யொருவாதசிவஞான, நிலைய
ருத்தம்யான்றேட நீயருள்செய்பராகுருவே, கலைமக
டன்னையகனுங் காண்பரியபெருமானே. (ங)

அத்தன்முதலானவுற வனைத்தும்விட்டுநாடோ
றும், புத்தியகலாவருளே பொருந்துறவென்றகங்க
ளிந்து, முத்துத்திவலைமயிர்க்கா ரேறுமுதிர்வுற
வே,சித்தமதிறைடிநிற்கத்திருவருள்செய்பெருமானே

எங்குமுளபலவான வின்பங்கள்கருதாது, தங்
குடத்தானந்தந்தாறைடியுளங்கசிவாய்ப், பொங்கியி
ருவிழியருவி பொழிந்திடவேவிம்மிவிம்மி, யங்கமற
ந்திடவருள்செ யானந்தப்பெருமானே. (ரு)

புகழ்பலவும்பெறக்கருதும் புந்திதனைவிட்டக
ற்றித், திகழுமுன்றன்புகழ்களின்மேற் செவிகள்செ
லவன்புடனென், னகமுருகிநானுநிற்கவருள்புரிதிய
ருட்கடலே, பகவன்முதலாம்பெயர்கொள் பரானந்
தப்பெருமானே. (சா)

அருந்தல்பெறவிரும்பிமிக வலையுமுளம்விட்ட கற்றிப், பொருந்துதிருவருளின்பம் பொசித்திடநீய ருள்புரிவாய், திருந்துசடைமொழுப்புநகுசிரமுமுறு ஞ்சென்னியனே, வருந்துமிடைமேற்களப மலைமக ள்சேர்பெருமானே. (எ)

புக்குமிகப்பலவாகும் பொருந்தல்பெறகாடாம ற், கக்குமொளித்திருப்பதத்திற் கலந்திருக்கவருள்பு ரிவாய், பக்குவத்துக்கீடாகப் பலவிதமாமுத்திநெறி, மிக்குநிகமாகமத்தில் விளம்புநடப்பெருமானே. ()

துர்க்குணமாங்காமாதி தொடராமற்சுகம்பெ ருக்குஞ், சற்குணமாமகமடக்கஞ் சாந்தமவாவுளமொ டுக்க, மிக்கபத்திதுறவடைதன் மெய்யுணர்தல்சிரத் தாதி, யெற்கருள்வாவிடைப்பரியே றின்பநடப்பெரு மானே. (கூ)

இலங்குதிரையெனுமூன்று மெழிற்பதத்தான் மலமழுத்தித், துலங்குதிருவருளென்னுந் தூக்கிய தாள்கொண்டெடுத்துக், கலங்குமெனைச்சாயுச்யகதி யினிடையுறவைப்பா, யலங்குமரிக்கரியளித்தவான ந்தப்பெருமானே. (க0)

வேண்டுதல் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# புலம்பல்.

## எண்சீரடியாசிரிய விருத்தம்.

காமமாகியகடலினில்வீழ்ந்து கடையனாகியிங் குழன்றிடலறிந்து, நேசமிகுந்துமுன்வரலபுரியாமணி நற்றாளுனழகாகுமோவுனக்கு, மாமன்மார்பனும்பூசிக் குமடியாய் வாசமாமலர்ப்பிரமனுமறியாக், தேமன் கொன்றையம்முடிவளர்பரமா தேசமேவியசிற்சபை ச்சிவமே. (க)

உலையும்வாழ்க்கையைமெய்யென்றுநம்பி யுற்று நாயினுங்கடையனாய்த்திரிந்து, நிலைமையாகியதுணை சற்றுமின்றி நின்றுவாடுதறன்னையேயறிந்தும், தலை வனாகியநீவராதிருக்கை, தக்கதோநினைப்பொருளத் தேனே, தொலைவிலாக்குள்ளக்குளிர்ந்திடும்பொய் கை சூழுந்தென்புலியூருடைச்சிவனே. (உ)

குத்திரத்தவன்வன்கொலையாளன் கொடுமையோ னாறுங்கைமருந்தினுக்குப், புத்தியோடுசுண்ணாம்பிடு வெனினும் பொருந்திடான்மிகுகோளனிராகன், மு த்திசேரடியாரொடுக்கூடான், மூடனென்றெனைவிட் டிடநினையேல், சித்திசித்தியென்முடியபரமா தெய்வ மம்பலநின்றிடுமொளியே. (ங)

நம்புவோருக்கும் வஞ்சகஞ்செய்வோ னல்ல சால்பொன் றுநாடிடிலில்லோன், வம்புசெய்பவன் வெகுளியனீமெய் வார்த்தைசொல்லெனின் மருந்துக்குஞ்சொல்லான், வெம்புசீவருக்கிரக்கமதில்லான் மிக்கவிடம்பனுலோபனிடும்பன், பம்புளத்தனென் றெவிடவினையேல் பாவிப்பாருளத் தெழுமருட்கடலே. (௪)

குளிர்மை தங்கிபகங்கைவாழ்சடையாய் கோலமார்புனிற்றம்புலித்தலையா, யொளிவிளங்கியபவிக்குநன்மலையே யோமெனும்பதப்பொருளதாஞ்சிவனே, யளிகள்சூழ்ந்திடுகொன்றையந்தார்சேர் தனிசெயம்புயனேமலைவில்லோ, யெளியனுளநமஞ் சக்கரப்பொருளை யிசைந்திடும்படியருள்புரிபரனே. (௫)

புலம்பல் முற்றிற்று.

௨

திருச்சிற்றம்பலம்.

முறையீடு.

கட்டளைக்கலித்துறை.

சீர்கொண்டநின்றிருப்பாதாம்புயத்திற் செறிந்திருக்க, நார்கொண்டவென்னைமனப்பேய்பிடித்து

நா

நடுக்கமுற, நீர்கொண்டபார்மிசையாட்டுதென் மாற்றி
நிகழருள்செய், கார்கொண்டசெஞ்சடைத்தேவேயிர
த்ன சபாபதியே. (௧)

ஆட்டாமலாடியபம்பரம்போற்றனதாமுருவங்
காட்டாமலுள்ளும்புறத்துஞ்சுழலுங் கலிமனத்தை,
வீட்டாமல்வீட்டிநடுநிலைமேவிய வீடுதெனுங், கா
ட்டாமரைப்பதந்தாவிரத்ன சபாபதியே. (௨)

வானேமுதலுலகெல்லாமுஞ்சற்பித்து வாழ்த்த
தனு, ஞானேயரசெனத்தானேசரித்து நடித்துமிகத்,
தேனேயெனுமருடோர்மனவானரந்திரவருள், தானே
தனக்கொப்பெனவாழிரத்ன சபாபதியே. (௩)

அங்கையினெல்லியம்மனைபோல வைத்திருள்
ளே, பொங்கிக்குதித்துக்குதித்தெழுந்தோடிடுபுன்ம
னத்தான், றங்கியிருக்கவருள்செய்துபேயனைத் தாள
கலப்பாய், சங்கரசம்புசிவமேயிரத்ன சபாபதியே. (

அதிகவிசைகொள்விழிசெண்பன்முக மாச்சித
றீச், சிதறியெழுந்திடும்பாழாமனந்தனைத் திர்த்து
து, நிறியமைருஞ்சிதாஞ்சிதபாதத்திற் சேர்த்தருள்
வாய், சதுர்பெறுஞானமணியேயிரத்ன சபாபதியே

புலிபோற்புலத்தின்மனம்பாய்ந்து பாய்ந்துசெம்போதகலை, மிலியாகியானிற்கச்செய்தவிலைதையின்படிப், பலியாக்கியென்னையருளாகவாடலுன் பாரமன்றோ, சலிலாலங்காரச்சடையோயிரத்ன சபாபதியே.
(கா)

ஐவாய்களாலும்விடமூட்டிக்கொல்லு மரவமெனை, மெய்வாய்கண்மூக்குச்செவியாலுந்துன்ப மிகக்கொளுத்திக், கைவாய்தவத்தைக்கெடுத்துத்திரியுங்களிமனங்கொல், தைவாய்பிறையிற்சமமாமிரத்னசபாபதியே.
(எ)

சேர்ந்தாரைக்கொல்லியெனவடியேனைத் தினந்தினமுங், காந்தாளமோடுவருத்தித்தவமுங்கனகுணமுந், தேய்ந்தோடச்செய்யு மனக்கொட்டந்தீர்ந்திடச்செய்வையரு, டாந்தாமெனநடித்திட்டோயிரத்ன சபாபதியே.
(அ)

மூத்தார்கள்போற்றுந்திருநடங்காண முயற்சியுடன், சுத்தநெறிச்செலவாவென்றடியன் சொலக்குதித்துப், பித்தநெறியிலிழுத்திடும்பாழ்மனம் பேர்த்திடுவாய், தத்தைதையென்றுநடிப்போயிரத்ன சபாபதியே,
(கூ)

புற்பேய்பனித்துளிபோலாமுடம் பென்றுபேதமதி, னிற்பேபமெனச்சொல்லொழுதேமுடுக்கி னினை

கலக்கித், தற்போதனைசெயும்பாழாமனத்தைத் தி
டைத்தருள்வாய், தற்போதமற்றநிலைமேவிரத்ன ச
பாபதியே. (௧0)

முறையீடு முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## கர்ணாமிர்தம்.

### ஆசிரிய விருத்தம்.

மாதர்கூந்தற்கருங்காட்டின் மயங்கிவிழியம்பே
றுண்டு, கேதமாகியுழல்வேனைக்கிழக்கேதள்ளிவிட்டு
விடேல், பூதநாதசங்கரனே பொன்னம்பலத்துண்ட
மாடு, வேதநாதபரம்பரனே விளங்கும்புலியூருடை
யானே. (௧)

அலைக்குமருப்புநகையார்தம் மகன்றவல்குற்கு
ழிமூழ்கி, மலைக்குன்றேறிமலைக்கின்ற மூடன்றன்
னைவிட்டுவிடேல், நலக்குஞானச்சுடரொளியேதூண்
டாவிளக்கேதீங்கரும்பே, கலக்குமெங்குங்காருணி
யக் கடவுள்புலியூருடையானே. (௨)

அன்னநடையார்நிதம்பமெனு மரவந்தீண்டச்
சற்றின்ப, மென்னுநஞ்சந்தலைக்கேறி யிருப்பேன்ற
ன்னைவிட்டுவிடேல், பொன்னம்பலத்தில்வாழ்சேவ

ங்கற்பகமேயற்புதமே, தன்னொப்பில்லானெனுமுக லே சந்தப்புலியூருடையானே. (௩)

சங்கவளையார்தனமலையைத் தனமாமலையென் றேகருதி, யிங்குத்துன்பமடைகின்றவேழையேனை விட்டுவிடேல், பொங்குகங்கைமுடியணிந்தபுனிதா ஞானோதயமூர்த்தி, செங்கைவீசிநின்றாடுஞ்செல்வாபு லியூருடையானே. (௪)

மடவாருயர்தமுலைக்கிரிக்கும்வளருநிதம்பக்க டற்குமிடை, யிடைவன்கொடியார்கட்டுண்டிங்கின னலுற்றேன்விட்டுவிடேல், விடமேறிடுகண்டத்தாந ல்வேதாவேதப்பொருளேயவ், வடையார்புரமூன்றெ ய்தவா வணியார்புலியூருடையானே. (௫)

ஏய்ந்தமாதர்முலைக்கரிக்குமிடையாமரிக்கு மிடை நெறியிம், போந்துரோமச்சங்கிலியார்ப்புண்டேன்ற ன்னைவிட்டுவிடேல், பாய்ந்தபுலியினதடரித்தபரனே பரமரகசியனே, தோய்ந்துவானமுயர்சோலைசூழும்பு லியூருடையானே. (௬)

மின்னார்கொங்கைப்பந்தாலே மெத்தமொத்துண் டிளைப்பேறி, யின்னுநிதம்பப்பாழ்ங்கிணற்றிலெடுப் பாரற்றுக்கிடப்பேனை, யுன்னாருட்கண் கண்டிலை யோ வுனக்குமுறைதான்கேட்டிலையோ, பொன்னா ர்மேனிவிடங்கனே புகழார்புலியூருடையானே. ()

பொற்பார்கொங்கைமாதருடைப் போகம்வே
ண்டித்திரிந்துழன்றே, யெய்ப்பாய்நாயேனிங்கிருக்
குமிருப்பைநீதானறியாயோ, வெப்பாலவர்க்குமப்பா
லாயிலங்குஞானச்சுடரொளியே, பைப்பாம்பணிந்
தபரஞ்சுடரே பாங்கார்புலியூருடையானே. (௮)

அடுக்குமன்னமன்னமிலா வையகுந்தங்கடைத
ளர, நடக்குமடவார்வலையதனாலென்மனத்தலைவீ
ழ்த்திடுவாய், படிக்குமாலோடயன்வணங்கும் பாண்
டிநாட்டையாளரசே, யெடுக்குமன்றுமலையானே
யெழிலார்புலியூருடையானே. (௯)

பாலிற்றெளிதேன்கலந்தற்றே பணிகண்மொழி
யார்தம்முடைய, வாலிதானவெயிற்றூறலருநீரொன்று
கருதடியேன், றூலிகரித்தசித்தத்தைத்தூரநீக்கியொ
ழித்திடுவாய், கூலியாளாமண்சுமந்துகொண்டபுலியூ
ருடையானே. (௧௦)

அழகுரோமக்கொடிகட்டி யல்குற்றேரின்மதத்
தேறி, யெழிலார்புருவவில்வளைத்தே யெரியார்விழி
வெங்கணைதொடுத்துச், செழியதடியாலோங்குமினோர்
சேனையோடென்னைக்களத்தி, ளிழியுமதனையெரிப்
பாய்நிற் கியசாம்புலியூருடையானே. (௧௧)

காட்டமீனங்கண்டவளை நகிலக்குமிழியுந்தியுந் தி, நீட்டமடிப்புத்திரைமாதர் நெரும்வடிவக்கடலா ழ்ந்து, வாட்டமுறயான்விதிவசமோவந்தபுலிதான்வி ழித்திருக்க, வாட்டையெடுத்தபெருங்கள்வாயலர்சே ர்புலியூருடையானே. (கஉ)

அல்குலரவமிடைச்சிங்க மணிசேர்கொங்கைக் கரியோதிச், செல்குலாவுகளக்கமுகந் திரண்டதொ டைச்செவ்வாழைகளும், புல்குமாதர்வடிவவனம்பு குந்துமயங்கவிதிவசமோ, மல்குவளங்களகலாத வ ண்ணப்புலியூருடையானே. (கரு)

ஈரமகன்றநெஞ்சவிற இணைந்தகேசப்புகையை விட்டு, நேருமுகச்செங்கொழுந்துயரநீட்டியெரியுமா தருக், கோரவனலிற்புழுப்போலக் கொடியேன்வா டவிதிவசமோ, சேருமன்னவயல்சூழ்ந்து செழிக்கு ம்புலியூருடையானே. (கச)

கடிப்பூங்குழலார்தம்முடைய கண்டங்கண்டங் கருமென்று, மடிப்புமடிப்புத்தருமென்றும்வளர்கா லுயிர்கொள்காலென்று, மிடிப்பாரவனையில்லாதவே ழையுணரவருள்புரிவாய், பொடிப்பூசிமெய்த்திருமே னிப் புங்காபுலியூருடையானே. (கரு)

பிடிபோனடையார்காதளவும் பெயருங்கணை
வெங்கணையென்று, மிடையூரிடையூறிடுமென்றுமெ
ழில்வாய்க்கூற்றுகூற்றென்று, மடிகளடிகடருமென்
றுமடியேனறியவருள்புரிவாய், கொடையோர்மேவு
நல்வேதக்குன்றேய்புலியூருடையானே. (௧௬)

பென்னம்பெருங்கொங்கையர்சமூகம்பேயார்ச
மூகமேயென்று, நன்னங்கணவர்நகைநாட்டனகை
யைநாட்டுமுலகர்திரு, முன்னொன்றென்னுணராவ
ருணமூவாவிடையின்மிகுமிடியாண் மன்னுதனங்க
ணைமிகவுடையாண் மணவாபுலியூருடையானே. ( )

ஊடுங்காமமூலமதனூசஞ்செய்,தநீயிருக்கக், கூ
டுங்காமக்கடல்கடக்கக்கொங்கைக்குடமீயுங்க ளை
த், தேடுந்தொடியார்பின்சென்று திரிதலுமேகாவுன்
னடியேன்,நீடும்வேதவனம்வாழு நிமலாபுலியூருடை
யானே. (௧௮)

காயுங்காமக்கனறணிக்கக் கங்கைகவைத்தவுணை
விட்டுச், சேயவதரபாணமியான்செய்யவருள்வீணை
ட்பெண்ணூர்,வாயைநோக்கிமிக்கலைந்துவாடலுமேகா
வுன்னடியேன், பாயுங்கருணைப்பெருங்கடலே பண்
பார்புலியூருடையானே. (௧௯)

தேமன்னினதுதிருப்பாதச் சீதரிழலையணைய மற், காமவெயிற்குக்குறங்கென்னுங் கதலிநீழலருள் வீரொன், சேமப்பொருளீரொனமாதர் பின்னேதிரிதல மூகேயோ, மாமன்மார்பனிதம்பணிய வாழ்தென்பு லியூருடையானே. (௨0)

கர்ன்றுமிர்தம் முற்றிற்று.

௨

திருச்சிற்றம்பலம்.

விண்ணப்பம்.

பாவினம்.

வெள்ளமிடவிருகண்ணீர் மொகுமொகெனவங் க மிகக்குழையப்புளகமெழவிநிர்த்திடவெட்டுயிர்த்து க், கள்ளமொடுபொய்தவிர்ந்துசற்குணங்களுற்றுக் கன்மனந்தானனல்கண்ட வெண்ணெயெனவுருகிப், பள்ளமதிற்செலுநீர்போற்றிருவடியிற்சேரப் பரப்பி யிருகரங்குவித்துமுடியிற்பால்கண்டு, தெள்ளமுத மெனத்துதிகள்பலவாகச்சொல்லத் திருவருளைத்தந் தருள்வாய் சிற்சபைவாழ்சிவனே. (௧)

சீர்வைத்தபட்டம்விரித்து சித்திரங்கள்காணத் தெரிவித்துப்பின்குவிந்து திகழ்த்தியிடாதென்னப், பார்வைத்துப்பின்பொடுக்கல் பண்ணும்வெளிச்சத்

தே பழியென்னுங்கொடியருக்கும்பெரியசுடர்வாளே, யாவைக்குமுபகிடதடேச்சிரசில்வசித்து நடனமனுதி னமுமிகவிளுமகாசிவமே, யாவைக்குமாங்கெருளே யிலங்கிடுநல்லருளேயெனைப்பிரியாப்பரம்பொருளே யெண்ணமுடித்தருளே. (உ)

கட்டுமாத்தீங்கனியேகதலிபலாக் கனியே கனி களெலாம்பிழிந்தெடுத்துக்கலக்குமொருசாறே, பட் டவதிற்றெளிதேனும்பாலுடனே கண்டும் பாகுமு ங்கூட்டிமிகப்பதத்தொடுசெய்திரட்டே, நட்டமிலா ச்சிவமணந்தான்வீசுநறுமலரோநண்ணுமதிலொழுகு மதிமதுரமெழுந்தேனே, யெட்டவரிதாங்தெருளேயி லங்கிடுநல்லருளே யெனைப்பிரியாப்பரம்பொருளே யெண்ணமுடித்தருளே. (ந)

அருண்மேவுமின்றனக் குப்புறம்பாகுமாற்றுல கங்கொள்வினைக்கடலழுந்திநினைமறந்துபுரிந்த பெ ரும்பிழைகள்பொறுத்துநதி யொடுக்குபெருங்கடல் போற்பேயேனைவிழுங்குபெரியபெருமானே, யொ ருகோடிபாவமொன்றாச் செய்யும்புண்ணியமொன் றொருகோடியாகச்செய்கச்சிகொளேகம்பா, கருமே கமேருதரித்தெனக்கரியினுரிவை கனகமயத்திருவுரு விற்றரித்தமகாதேவே. (சு)

கொல்லாதநால்வர்க்கும்யோகியாகிக் குருஞானமருள்சிவனேவேகியாகிப், பொல்லாரைத்தண்டித்தோய்சிவர்கட்குப்போகியாயின்பமளித்தருளுந்தேவே, நால்லாளோடிடபத்திலிவர்ந்துவந்து நாயேற்குக்கருணைநல்கியறிதல்செய்த, வெல்லாநின்றிருப்பணியாகக்கொண்டேகுற்ற மெல்லாநீபொறுத்தருளவேண்டுமென்றே. (௫)

எச்சமயத்துள்ளவருமிறைஞ்சாநின்ற வின்பமயத்திருவடியிலணைந்துவாழ, விச்சிறியேன்றனைவைத்துச்சிறுபோதத்தி லியங்காமற்காத்தலுன்றன்கடனேயாலம், வைச்சகண்டாசசிகண்டாவகண்டயாவவாழ்வுற்றபரசிவமேஞானமூர்த்தி, சச்சிதானந்தமயப்பொதுவின்மேவித் தனிநடஞ்செய்நடராஜதேவதேவே. (௬)

துறந்துநின்றதவர்க்கறமுஞ்சொன்னதேவே சுதைநீர்போலுங்கலந்தேசுடர்ப்பாதத்தி, லிறந்துநின்றும்பிறவாமலிருக்குஞான மிசைந்தளித்தாயதனையுணர்வின்மையாலே, மறந்துநின்றபிழைபொறுத்துமடவேன்வாழும் வண்ணமருளொடினிதாமகிழ்ந்துநீயே, சிறந்துநின்றசிவகாமித்தேவியோடுஞ் சேவமர்ந்திங்கெளியேன்முன்றிகழுவாயே. (௭)

சிலந்திகண்ணப்பர்சாக்கியர்முதலோர் தீமை
யைக்குணமெனக்கொண்ட, நலந்தனைக்கண்டுதிருவ
டியடைந்தேனற்றிருவாக்கொன்றுசொல்வாய், சலங்
தலைக்கொண்டதேவனேயுமையா டங்கியபங்கனே
யெவைக்கும், பலந்தருதிருச்சிற்றம்பலம்வாழும்ப
ரமனே நடனசங்கரனே. (அ)

கதியருள்சண்டபாதகனார்முதலோர் கருதியவண்
ணமேயளித்த, நிதிதனைக்கண்டுதிருவடியடைந்தே
ன்றேவியொடென்முனேநிற்பாய், விதியொடுமாலும்
புகழ்ந்திடாதாவித்தகாதென்புலியூராம், பதியமர்தி
ருச்சிற்றம்பலம்வாழும் பரமனேநடனசங்கரனே.

செம்பதந்தன்னைச்சிக்கெனப்பிடிக்கத் திருவரு
டந்தெனையாளாய், கம்பமார்தேவமகளிர்மங்கலநான்
காத்திடுங்கண்டனேயகண்டா, சம்புவேபொன்னம்
பலவனேசெகணததிங்கணததிங்கணவென்ன, வம்பு
யவிழியாளின்புறநட்டஞ்செய் யரசனேபரமராசியனே.

என்றுமியானெனதென்கின்றவாசனையுமிங்கக
க்கவலையுமின்றி, யுன்றனையனுபவத்துளபடியேயுன்
னருளாலுணர்ந்தடங்கி, யொன்றதாயின்பமடைந்து
மேனிலையிலுற்றிடவேழையேன்முன்வந், தின்றுநீக
[illegible]புரிந்திடல்வேண்டுமிறைநடராஜசங்கரனே: ()

தவளத்திங்கண்முடியுலவத்தாதாடுறுபூஞ்சோ
லைதிகழ், சுவணத்தில்லைமணிமன்றுட் சுகமாநடனம
லர்க்கூந்தற், பவளத்ததரத்துமைகாணப்பயிலுங்கரு
ணைக்கடலேநீ, கவலைக்காளாமெனைப்பொருவில்கரு
ணையமுதீந்தாளாயே. (கஉ)

ஆராவியற்கையவாவெழுப்பி யதனாற்பிறப்பில்
வீழ்த்திட்டுப், பேராவியற்கைபெறலொட்டாவகை
யேபெருக்கிச்சுடுகின்ற, காராரஞ்ஞானக்கினியைக்க
ழிக்கஞானவமுதீவாய், சீராருஞ்ஞானகானேதில்லை
ப்பொதுவினம்மானே. (கங)

ஊனூர்தோட்டிகொடுபுலமாமோனைந்தானையட
க்குதல்செய், வானூரவரைக்கூடும்வணம்வண்மைஞா
னவமுதீவா, யெரியாரிடுகாடுபேணமுண்டேப்பமி
ட்டுப்பேயாடக், கரிகாடரங்காவாடுகின்றகருத்தாமு
துகுன்றுடையானே. (கச)

காரார்கூந்தற்பிறைநுதல்வாட் கட்செங்குமுத
வாய்மாதர், தீராமயக்கிற்பட்டுழலுந் தீயேனுய்தற்க
ருளாயோ, ஏரார்ஞானகாண்டமுடி வேகமாகத்தக
விலர்க்குப், பாரார்கன்மகாண்டத்திற்பலவாச்சொ
ல்ஸ்ரீவதாகமனே. (கரு)

பேதமிலாத்தேவேபொற்பிரபைக்குள்ளே பேசரியவுயிர்க்குயிரேபிரமயேமே, வேதமிலாக்களமேயிலகுவேயெங்குமியாவைக்குங்கரியேநல்லியசேபக்தக், கேதமிலாத்துரியநகரதிற்கிளர்ந்தகேவலப்பெண்கூடிநலங்கிடைத்தல்வேண்டிச், சேதமிலாச்சன்மார்க்கஞ்சிறியேன்சிந்தச் சிறுதூரகநடக்கநினை திருவுளத்தே. (கசு)

தருமமிலேசிற்குமொருசம்புமுனிவற்கரிய சம்புகனிபை, யருளும்வளர்கங்கையினைவேய்ந்தனிரும்புலியினதளரிடமா, பருமலர்களிற்பாஞ்சசன்னியமுமன்னமதும்வாழுமதனாற், றிருவனிகர்பைங்கமலநற்றடமிலங்குமொருதில்லைநகரே. (கஎ)

ஒன்றேதெய்வமுண்டென்றுணர்மி னுலகீரே, மன்றேயாடும்வாரேற்காண்மினுலகீரே, நன்றுமடி-கனுடிப்பிடிமினுலகீரே, பொன்றுமுத்திப் புரிகைக்கொளலாமுலகீரே. (கஅ)

அரனூனையுளமாம்பெருங்கோயில்வைத் தன்பெனும்புட், கரமாட்டிச்சாந்தமென்சந்தனஞ்சாத்திக்கருத்தொருமித், தூரனோதியானமலர்தூஉய்த்தற்போதமெனுள்ளமுநா, திரமாவிவேதிப்பதென்றேநடேசசிதம்பரனே. (க௯)

ஆர்புலக்காட்டைப்பஞ்சாக்கரவாட்கொண் டு
குற்றிமனப், பார்தான்றிருத்திச் சிவஞானவித்தைப்
பதித்தருளா,நீர்மிகப்பாய்ச்சியுயிர்ப்போதவெங்களை
நீத்துச்சிவா, காரவுணவுணச்செய்வாய்நடேசநற்கா
ரணனே, (உ0)

நெஞ்சேகுருசொன்னெறியினின்றுவுநெடும்ப
ணியி, னஞ்சேகளத்திற்குடியாநடேசனறியகஞ்சச்,
செஞ்சேவடிகதியென்றிருந்தாலுஞ்சிறுமையர்ந், தஞ்
சேனமிங்கக்கொலையேபுரிந்திடு மந்தகற்கே. (உக)

எப்பிறப்பினையெய்தினு
மொப்பிலுன்பதத்தொன்றிடுங்
கப்பிலன்புகனத்துறத்
தப்பிலாதருள்சம்புவே. (உஉ)

விண்ணப்பம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

நிலைமண்டிலவாசிரியப்பா.

பூமலிகற்பகப் பொன்னுலகமரு
நாமலிவேதமு நாடித்துதிக்கச்
சிவகாமியம்மை திருவிழிகளிக்க
வவனிவாழுயிர்க ளருங்கதிசேர

வமையும்பொருட மருளியசிவமே
யிமையாநாட்டத் தெழுமற்புதமே
யேதமாம்பந்த மெழின்முத்தியினும்
பாதுகாத்தருளும் பரிபூரணமே
சரியைகிரியைக் குரியோர்வணங்க
வுருநாளுவாம் பெருஞ்செல்வமமே
தகவுறநாடிச் சக்கரமுணர்ந்து
சுகமுறநாடிச் சுத்தியும்பெற்றே
யாசான்பதங்க ளன்புடன்போற்றிப்
பேசாதிருந்து பிராணபானன்
றஞ்செயலடக்கித் தம்வசமாக்கிச்
செஞ்சுடர்மதிதாம் வலமிடந்திரியுங்
கிரியாஞ்சுழினைப் புருவநடுநோக்கிப்
பொறிவழியாற்புலம்புகு மனதிறுத்திக்
குறிசிவத்தியானங் கொண்டயோகியர்க
டெரிசனஞ்செய்யுந் தேஜோமயமே
திரிமலமறுத்துச் செய்வினையால்வரு
மின்பத்துன்பங்க ளியல்பெனப்பொறுத்தே
யன்பும்வெறுப்பு மகன்றிடத்தள்ளி
வேதாகமமுடி வோதியுணர்ந்தே
யீதனுவெனுந்தற் போதமுமொழித்து
கவமுறுமொருளுணர் சிவஞானிகளின்

மோனத்தெழுந்த வானந்தம்மே
தீர்த்தமாகி யெவைக்குஞ்சீர்ப்பர
மார்த்தமுணர்ந்த மதிஞர்க்குறமே
மண்ணாறலங்கி வாயுவாகாய
மொண்கதிர்மதிதம் மூடனுணர்வான
வெட்டுருவாகிச் சுட்டறுபொருளே
மாயைமலஞ்செய் மயக்கத்தாலே
தூயஞானச் சுகநெறிவிட்டே
குடும்பபாரக் கொடுஞ்சுமைதாங்கி
யில்லாண்முதலோ ரெண்ணமாம்பொதியே
றெல்லையினடத்திக் கொண்டுறுகண்ணோர்
மடமாமருநெறி நடந்திடும்போது
மனமேகந்தான் றனமுதலான
விச்சையாநீரை நிச்சமும்பொழிவுற
வைம்புலமான வகலிருண்மயங்கி
வன்பவமாமுள் வனத்தினடைந்தே
யழியாக்கவலை யாங்களருளாயி
னமுந்திவருந்தி யாகமுமிளைத்துச்
சித்தங்கலங்கும் பித்தனேற்கென்னே
குளிர்நிறைமதியங் குலவுசண்முகமு

# சிவசந்நிதானமுறை.

மணிநிறைகமல மனைவிருவிழியுஞ்
சத்தியவாக்குந் தன்கழுநீர்மலர்க்
கத்திகைப்புயமுங் கண்டடைந்தோரை
யன்புடனெடுத்தே யணைத்திடுகரமு
மின்பங்கொடுக்கு மிணைத்தாண்மலருஞ்
சிவணிச்சுயம்பிர காசதேசிகனென்
றவனியினிவந் தடியேன்மீதி
லருள்விழிசாத்தித் தெருளுறுதீட்சை
பொருளுறச்செய்தே யொருமொழிவழியா
ஞானமொன்றுமே மோனமளிக்குந்
சற்குருலிங்க சங்கமவழியாம்
பொற்புண்ணியங்கள் புனிதசித்தமதா
செய்துஞானநூல் சிரவணஞ்தியா
மெய்ச்சரியாதி வீதிசெலுத்துவித்
துண்மைமுத்தித் திண்மைதருமென்றும்
வாசனையாலே வந்திடுமச்ச
மாசைவெகுளி யடர்மயக்கறுத்து
யானெனதென்செருக் கிகந்தருடவன்குணை
ஞானநெறியி னடப்பாயென்று
மிருவினைசமனுக் கருதுதியென்றும்
வினைகடம்மாலே தனுவருமென்றுந்

தூலமுதலவை துக்கமசுத்த
மேலுமியல்பா மிவையுணையறியா
வழியுமாகலி னெழிலுளசென்னிகழ்
மேலெதிரென்ற காலமூன்றினுமே
குற்றிமகன்போ லுற்றனவான
வுருநாமவக ளொருங்கேகெடாய்யென்
றுண்மைவிளங்கக் கண்ணையளித்தும்
ஶ்ரீசிவமணி புண்ணியபஞ்சாக்கரப்
போதப்பொருண்மெய்ப் போதமாமென்று
நிற்குணபூசை நெறியறிவித்துஞ்
சற்குணமாக்கும் பஞ்சதசாங்க
யோகம்பகர்ந்து யோகமுறவிர்த்துங்
குடவெளிமாவெளி யடைவுபோலக்
கருவிகடம்மைக் கலந்துங்கலவா
திருக்குமிரிக்கு மியல்புடையறிவே
சச்சிதானந்த சற்சொருபமது
நிச்சயமாக நீயென்றுரைத்து
மிதயத்தானதி பதித்திந்நிலையின்
ஞானசமாதி நண்ணியின்புற்று
மோனமாய்ச்சுட்டு முற்றுநீக்கிந்நிலை
யியல்புறமுச்சிய மெம்மகத்தந்தத்

துயர்ந்திடுநிலையு முவமையற்றதுமா
மாதலினன்பா யாக்கையுள்ளவுந்
நீதுமையையந் திரிபிலாதமர்ந்தே
யிந்நிலைவாழ்தி யென்றும்புகன்றே
யுன்னடியேனைக் காக்குமுண்மையனே
கைம்மாறுவேண்டாக் கருணைக்கடலே
பொய்ம்மலமறுக்கும் புண்ணியமுடிவே
பவமறுத்தருளுஞ் சிவபுரத்தரசே
கன்னற்பாகே கதலிக்கனியே
யென்னுடையுயிரே யென்கண்மணியே
யுய்வகைகாட்டு முணர்வாமணியே
கைதரவந்த கடவுள்கற்பகமே
யிதயகுகேச வதிரகசியமே
சுருதித்தலைவாழ துரியச்சரணந்
தருவாய்தருவாய் சரணஞ்சரணே.

ஆசிரியப்பா முற்றிற்று.

௪. விருத்தம்.

வெண்பிறையணிந்தவேணி விண்ணவாவன்பி
லாத, பண்பினனெனினுமுன்னைப்பாடினலிரங்குவா

யென்,றெண்படுதோத்திரங்களிசைத்தனனருளாலே ழை, தண்படுகுணமாக்கொண்டு சரணருள்வாய்நீ வாழி. (க)

சிவசந்நிதானமுறை
முற்றுப்பெற்றது.

உ

திருச்சிற்றம்பலம்.

# சிவகாமியம்மைபேரில்

ஆசிரியவிருத்தம்.

பற்றியபசியிற்கிரையதுதேடிப் பறந்திடக்கடு வெளிசுழல்கால்பயந்தருமிடிகண்மினவிருண்மழை சம்பவித்திடச்சிறகுகளோய்த,லுற்றிடும்பொழுதில் வில்லுடையனேக்கண் டொடுங்கியபறவைபோற்றுய ர முறுவரிப்புவியினைதருளிலத்தலுலகினிலன்புறு க்தாய்தான், பெற்றிடுமகவிற்பேதையாயிருந்தாற்பி ன்றனிவிடுவதுமுண்டோ பிழைகளியான் செயினும் பொறுத்துளமகிழ்ந்து பிழைக்குமாறருள்புரிந்தா ளாய், சிற்றிடையாளேயருட்பெருங்கடலே சித்திக ந்திடுகுணக்குன்றே திகழ்சிதம்பரியேமகிழ்திகம்பரி யே சிவசிவகாமசுந்தரியே. (க)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

## குருவ்ப துதி.

என்னகத்துள்ளீ யுனக்குறைகியிருப்பதை யறிந்திடாதலைந்து, பின்னியகோசரூபமாமாயைப்பிணிப்புறுபேதையேன்முன்வந், தின்னருள்புரிந்தேயொருமொழிபேசியியைந்ததற்போத நீங்கினக்காற்; றென்மறையாகமாந்தமொன்றெனச்சொல் சுயம்பிரகாசதேசிகனே. (௧)

முற்றிற்று.

கூ

திருச்சிற்றம்பலம்.

## அடியார் துதி.

கருநீறுபடுத்துமுத்தி காட்டிடுமீசனாக், திருநீறுமணிபூண்டேத்தல் சிறப்பெழுத்தைந்தையோதல் லிருநீர்மையின்றியுன்ன லேய்ந்தறிந்கலை தன்மேவும், பெருநீர்மையார்க்கன்பாற்றும் பெரியவர்க்கடியேன்யானே. (௧)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

# விளம்பரம்.

---

இதனையியாவருக்குமறிவிப்பதியாதெனில் சென்னைமாநகரம் பெத்துநாயக்கன்பேட்டை சீரங்கப்பட்டணம் சுப்பிரமணியமுதலியார்தெருவில் (௨௫) வது கதவிலக்கமுள்ளவீட்டிலிருக்கும்கொண்ணூர் மாணிக்கமுதலியாரவர்களுடையமனோன்மணிவிலாசமென்னும் அச்சுக்கூடத்திற்பதிப்பித்திருக்கும் புத்தகங்களாவன.

௧௨, ஸ்கந்தமாகியபாகவதவசனம் சித்திரப்படங்களுடன்

விசேஷமாகஅநேகங்கதைகளும் விருத்தங்களுஞ்சேர்ந்தபாரதம்வாலம்-௯-கூடியபுத்தகம்.

அருட்பா.

பெரியபுராணம்பாட்டு.

காளத்திபுராணம்.

கந்தபுராணச்சுருக்கம்.

சிதம்பரபுராணம் மூலமும் உரையும்

பத்திராசலராமதாசுகீர்த்தனை.

சாரங்தகணேசர்புராணம்.

ஞானவாசிட்டவசனம்.

நைடதமூலம்.

இரங்கேசவெண்பா மூலமும்உரையும்.

இன்னும்பலவிதபுத்தகங்களும் விலைசரசமாய் வை-அச்சுக்கூடத்திலும் சிதம்பரம்மேற்கோபுரவாயற்படியில் புத்தகஷாப்புக்கடைவைத்திருக்கும் வை கோ - மாணிக்கமுதலியாரவர்களிடத்திலும் பெற்றுக்கொள்ளலாம்.